21st September 1961]

available and the equipment available to these boys and girls in the various secondary schools. The Government are always keeping these things in view.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர் அவர்கள் கூறிய பதிலில் இருந்து கிராமப் புறங்களில் புதிதாகத் தோன்றியுள்ள உயர் நிலைப் பள்ளிகளில் தேர்வு மிகக் குறைவாக இருக்கிறது என்று தெரிகிறது. இதற்கு முக்கிய காரணம் பெரும்பாலான புதிய பள்ளிகளில் லாபரட்டரி, மாப் முதலிய வசதிகள் கிடையாது. ஆகையால் இந்தப் புதிதாகத் தோன்றிய பள்ளிகளில் லாபரட்டரி, மாப்புகள் வைப்பதற்கு மத்திய சர்க்கார் நிதியில் இருந்து விசேஷ கிராண்ட் பெருவதற்கு நமது அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நிதி எங்கிருந்து வருவது என்பது இரண்டாவது காரணம். இந்த வசதிகளை திட்டமாக செய்வது அவசியம். புதிதாக ஏற்பட்ட பள்ளிகளுக்கு கட்டடங்கள் கட்டுவதற்கே சரியாக இருந்தது. மக்களுடைய ஒத்துழைப்பும் மிகவும் அவசியம்.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் கொடுத்த புள்ளி விவரத்தில் கடந்த 3 வருட காலத்தில் 45 சத விகிதத்தில் இருந்து 51 சத விகிதத்துக்குள் மாணவர்கள் தேர்வு இருந்திருக்கிறது. இந்த 51 சத விகிதம் என்ற உயர்ந்தபட்ச அளவே குறைவானது அல்லவா ? ஏன் இவ்வளவு மட்டமாக இருக்கிறது ? அதற்கான காரணங்கள் என்ன வென்று ஆராய்ந்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பல காரணங்கள் சொல்ல முடியும். ஒவ்வொருவர் ஒவ்வொரு காரணத்தைச் சொல்கிறார்கள். நிலைமைபொதுவாக அபிவிருத்தி அடைந்து வருகிறது என்பதைத்தான் புள்ளிவிவரம் காட்டுகிறது. கிராமப்புறங்களில் திறமை போதுமானதாக இல்லை என்பதைக் காண்கிறோம். ஆனால் இப்போது நாம் எடுத்துவருகிற நடவடிக்கைகள் காரணமாக கிராமங்களிலும்கூட தரம் உயர்வதற்கான வசதிகள் பெருக்கப்படுகின்றன.

SRI R. SRINIVASA IYER : இந்த எஸ்.எஸ்.எல். ஸி. போகும் மாணவர்களின் மார்க்கு புஸ்தகங்களைப் பார்த்தால், ஒரு சப்ஜக்ட் இரண்டு சப்ஜக்டில் குறைவாக மார்க் வாங்கினதினால்தான் தவறிவிடுகிறார்கள். பழைய காலத்தில் அவர்கள் எல்லா சப்ஜக்டிலும் நல்ல பயிற்சி பெரு வதற்கு மாதா மாதம் ஒவ்வொரு சப்ஜக்டிலும் டெஸ்ட் வைப்பார்கள், கேள்விகள் கேட்டுவந்தார்கள். அப்படி கேட்டு நன்றாக படிப்பவர்களுக்கு முதலிடமும், படிக்காதவர்கள் They will go to the last என்று கடைசியில் இடம் கொடுப்பார்கள். அதனால் அவர்கள் அப்பொழுது ஆவரேஜ் மார்க்குகளுக்குமேல் வாங்குவார்கள். அதுபோல் இப்பொழுதும் மாணவர்கள் நல்ல மார்க்கு வாங்குவதற்கு சிலபஸ்ஸில் பரீட்சார்த்தமாக ஏதாவது மாறுதல் செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இது சிக்கலான விஷயம். கேள்வி நேரத்திலே இதற்குப் பதில் சொல்லி யாரையும் திருப்தி செய்ய முடியாது.

* 1666 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether it was a fact that some of the unselected or failed candidates for the S.S.L.C. Examination of March 1961 were given pass marks and declared promoted by mistake by the authorities; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

[21st September 1961

SRI V. K. KOTHANDARAMAN : எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சைக்கு வடிக்கட்டக்கூடிய முறையில் ஏற்படும் குறைபாட்டின் காரணமாக மாணவர் களிடையே அதிருப்தி ஏற்பட்டதினுல், அந்த வடிக்கட்டும் முறையை நீக்கி விடுவதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: எல்லோருக்குமே பாஸ் கொடுக்கவேண்டுமென்று கனம் அங்கத்தினர் சொல்லுகிருரா ? இப் பொழுது 51 சதம் பாஸ் பண்ணியிருக்கிருர்கள், 49 சதம் வடிக்கட்டி யிருக்கிருர்கள்.

*English in Elementary Schools.*

* 1667 *Q.*—SRI A. A. RASHEED : }
SRI T. S. RAMASWAMI : } Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) when English will be taught from the 4th Standard in the Elementary Schools;

(*b*) if so, whether Secondary Grade or Senior Grade teachers will be appointed for 4th Standard also in future;

(*c*) the number of teachers who have undergone training in the teaching of English so far; and

(*d*) whether it is proposed to impart training in the teaching of English to the Secondary Grade or Senior Grade teachers now undergoing training in the training school itself, without recourse to deputing them for training again?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The matter is under consideration.

(*c*) 4,570 teachers of which 1,170 are in primary courses and 3,400 in Secondary courses.

(*d*) The revision of the syllabus in English for Secondary and Senior Basic grades in Training schools is under consideration. In the meantime, school assistants doing the teaching of English in Training schools are also being retrained.

SRI A. A. RASHEED : In view of the fact that the medium of instruction has been changed to Tamil, will the Government consider the question of introducing the teaching of English from the Fourth standard as early as possible?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have already stated that the matter is under consideration.

*Arunachaleswara temple (Tiruvannamalai)*

* 1668 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லா, திருவண்ணுமலையில் உள்ள அருணுசலேஸ் வரர் ஆலயத்தில் சிறிய கோபுரங்களில் உள்ள தங்க முலாம்களை, திருடர்கள் களவு செய்துவிட்டார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(இ) அப்படியானுல், இது சம்பந்தமாய் எடுத்துக்கொண்ட நடவடிக் கைகள் யாவை ?